கடவுள் துணை.

விநோத

# ஜாலக்கண்ணாடி.

நான்காம்பாகம்.

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,




தமது

சென்னைக்கூனே,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

கடவுள் துணை.

# ஸ்காந்தஜாலம்.

காப்பு-விருத்தம்.

ஆதியாம் சத்திசிவ மிரண்டுங்காப்பு
அருபுருவாகிநின்றபிர்மங்காப்பு
சோதியா முதற்கடவுள் அடியேகாப்பு
சொல்லரிய பித்தாடிக் கமலக்காப்பு
நீதியாய் கலைவாணி நிதமுங்காப்பு
நிருபமாயுரைத்த குருவேகாப்பு
பேதியாதேயுலகில் யெவருங்காணப்
பேசுகிறேன் ஸ்காந்தமென்னும் ஜாலந்தானே.



வாய்வுஸ்தம்பன ஜாலம்.

காந்தமென்றால் ஊசிபிடிக்குங்காந்தம்
கவ்வுனியே பலமெட்டாய் கொண்டுவந்து
போந்தவெள்ளிவிட்டு வலச்சல்தன்னில்
பொதித்திடுவாய் திசைநாலும் பலமிரண்டும்
சாந்தமாயிருந்து தபசுசெய்ய
சட்டமாயிருப்பாலே பலகைசெய்து

கூர்ந்தமான வென்றிடா ருக்ஷங்களு
 குறிப்பாக மையந்தில் போட்டுருந்தே.

குந்தவே யென்சொல்வேன் ஸ்காந்தவித்தை
 குலுக்காமல் கிளம்புமடா பலகையோடே
அந்தரமாய்யிருந்து செய்யும்வித்தை
 அரகாரிஷியைப்போல் யோகம்மூட்டு
வந்திருக்கும் சபையோர்கள் எண்ணமிட்டு
 வாய்வுஸ்தம்பனமென்றே மயங்குவார்கள்
சந்ததமென் மனமறிந்த ஆசான்வாக்கு
 சந்தேகமில்லையடா செய்துபாரே.

(வ-ம்) ஏழுசிபிடிக்கும் காந்தமாக எடடுபலங் கொண்டுவந்து கொஞ்சம்மறைவாக யிருக்கும்படியான வீட்டுக்குள் வலச்சல் மேல் மையம்பார்த்து ஒருகெஜநிகளசவுக்கமாகநாலுமூலையிலும் உ-பலம் காந்தமெடுத்து நிற்கும்படியான வலுவாகப் பொருந்த வைத்து அதற்குநேர் கீழாக யிரும்புபலகை சின்னமாகவும் ஒரு ஆள் குந்தத்தக்கினதாவும் போட்டு விட்டுவிடாமல் உடனேகுந்திக்கொள்ளவும் ஆனால் குந்துகிறவன் விபூதி ருத்திராட்சம் காஷாயம்பூண்டு யோகியைப்போல் இருக்கவேணும் குந்தினவுடன் வாயை கெட்டியாக மூடிக்கொண்டு தம்பிடிக்கிறவனைப்போல் பூடகமாயிருந்தால் தான் பார்க்கிறவர்கள் வாய்வுஸ்தம்பனம் செய்கிறானென்பார்கள் மிகவும் மகிமையாக யென்னுவார்கள் ஆனால் காந்தம் யாருக்கும் தெரியாமல் வைத்திருக்கவேணும்

மரக்கிளியை பறக்கவிடும் ஜாலம்.



செய்யடாமரத்தாலே கிளிதானொன்று
 சிப்பியவன்லட்சணமாய் செய்யவேணும்
வையடாரெக்கையது நகட்டினாலே
 வைப்பதுதான் கிலிருந்து ஆடவேணும்
பையடாகாந்தமது யிருக்கும்வீட்டில்
 பாலகனேகிளியதனை யேந்திநில்லு
பொய்யடாயில்லை யந்திரமாய்நிற்கும்
 பொட்டனவே மறுபடியும் பிடித்துக்கொள்ளே.

பிடித்தவுடன் ரெக்கைதனை மடிந்துப்போடு
 பாருங்கள் யென்றுகையில் யேந்திநில்லு
விடுத்தவுடன் ரெக்கையது விரித்துக்கொள்ளும்
 விள்ளுமுன்னே யந்திரமாய் மேலேபோகும்
அடுத்திருக்கும் சபையோர்கள் பார்த்துபார்த்து
 ஆதிமுதல் மந்திரத்தில் தேர்ந்தோனென்பார்

கபடத்தமன வஞ்சருக்குச் சொல்லவேண்டாம்
கண்மணியே யின்னாலே பதனம்பண்ணே.

(வ ம்) மரத்தினால் கிளிபோல்செய்து வர்ணம் முதலானதும் உள்ளிதமாகப்பூசி ரெக்கைமாத்திரம் மெல்லிசிபான ஸிரும்புத் தகட்டினாலே கத்திரித்து அதற்கு ஸ்குருகள்வைத்து ரெக்கை ஆடும்படியான தந்திரத்தோடு தொடுக்கவும் ஒவ்வொரு பக்கமும்பாதிரெக்கைக்கு மாத்திரம் பலவித வர்ணம் பூசியிருக்கவும் நடிக்கும்போது காந்தமிருக்கிற வீட்டில்சென்று இதோ மரத்தினால்செய்தகிளி அந்திரமாய் பறக்குமாவென்றுசொல்லி ஆகிலும் ஒருமந்திரம்போடுகிறேன் பாருங்கள் யென்றுசொல்லி விபூதியெடுத்து மேலும்கீழுமாக முழித்துமுழித்து பார்த்து சல்மலையாளபகவதி ஓடிவா சபையிலேவந்து சற்றுநேரம் நில்லுயென்று விபூதியை காளிக்கும்போட்டு இந்தகிளியை உள்ளங்கையிலேவைத்துயேந்தினால் மேலுக்குகிளம்பும் கைக்கு எட்டினவரையில் போகும்போது மறுபடியும்பிடித்து ரெக்கையைமடித்து முன்போலயேந்தவும் மறுபடியும் அப்படியேகிளம்பும் பார்ப்பவர்களெல்லாம் மந்திரஞ்செய்தானென்று மயங்கித்தியங்குவார்கள்.



அந்தரவிநாயகரைக் காட்டுஞ்சாலம.

பண்ணப்பா மரத்தாலே கணேசன்போலே
பக்குவமாய்அவயவங்கள் நன்றாய்ச்செய்து
கண்ணப்பா நகையாலும்புஷ்பத்தாலும்
கணேசரைத்தா னன்றாக அலங்கரித்து
விண்ணப்பா காந்தத்தின் நேர்மையாக
வைத்துவிடு யிரும்பொன்று பலகைபோட்டு

நின்னைப்பார் குடமதை கொளுத்திக்கொண்டு
நினைவாக மணியாட்டி தூபங்காட்டு.
தூபமது காட்டுதற்கு முன்னேயிசன்
துலங்குவார் அந்திரமாய் பலகைபோடே
சாபமிதற்கில்லையடா குட்சவித்தை.
சண்முகற்குச்சிஷனடா யெந்தனுசான்
கோபமுதல்பொய்களவு யில்லாதாலே
கொடுத்தமொழி உலகறிய வெளியாய்போட்டேன்
தாபம்போல் செனங்களெல்லா மயங்கித்தேங்கி
தலையாலேஉன்னடியை வணங்குவாரே.

(வ-ம்) மரத்தினாலே விநாயகரைப்போல்செய்து அவயவங்கள் பின்னப்படாமல் பக்குவமாய்செய்து வர்ணம்முதலானதும்பூசி புஷ்பத்தினாலே சாத்துபடிசெய்து நகைகள் முதலானதும் கொண்டு அலங்கரித்து காந்தமிருக்கும் வீட்டில்சென்று மேலேயிருக்கும் காந்தத்துக்கு நேர்கீழாக இரும்பு பலகைபோட்டு கணேசரைவைத்து சபையோர்க்கு காட்டிவிட்டு குடம்கொளுத்திவலது கையிலும் மணிஎடுத்து யிடதுகையிலும் பிடித்துநின்று விநாயகர் அகவலைப்படிக்கவும் கணேசர் அந்திரமாய்க்கிளம்புவார் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள் மிகவுமுன்னிதமானவேடிக்கையாயிருக்கும். 51

### குடத்துமேல் தேங்காயுடைக்குஞ் சாலம்.

வணங்கவேகுப்பையுட மேனிமூலி
வளமான ஆதியென்ற வாரந்தன்னில்
யிணங்கவேகன்னிநூல் காப்புக்கட்டி
யெடுத்துவா உன்னுடைய பட்சிபார்த்து
அணங்கவேவேரதனைக் கீழேவைத்து
அப்பனே புறக்குடத்தை மேலேமூடி
ஜெனங்களேபாரென்று தேங்காய்மோது
சிதறியேபோகுமடா தூளாய்தானே.

(வ-ம்) குப்பைமேனிச் செடிக்கு ஆதிவாரம்பார்த்து மஞ்சள் நூலினால் காப்புக்கட்டி தூபதீபங்கொடுத்து வேர் அறாமல் பிடுங்கிவந்து புறக்குடத்துள்ளே வைத்து கவிழ்த்துவிட்டுதேங்காயை மோதிநேராக அடித்தால் குரைவிட்டதுபோல் சிதறிப்போகும் ஆனால் தன்பேருக்கு உள்ளபட்சி அரசாயிருக்கும்போது காப்பு கட்டவேணும் இதுகைகண்டது. 52

## ஆடுமேயாத ஜாலம்.

நானென்ற மூன்றுரை பிடித்துமைந்தா
தண்ணியதுவோடையிலே விட்டுப்பாரு
ஏனென்று எதிர்நோக்கி ஓடுமப்பா
இருதுண்டாய்க் கத்தியினால் போடுபோடு
ஆனென்றதலைபுறத்தை யெடுத்துவந்து
ஆடிருக்கும்மிடந்தேடி புதைத்துப்போடு
நானென்றே தழைமேயப் போகாதப்பா
நாட்டிலே பரிட்சையிதை பார்த்தாருண்டு.

(வ-ம்) மூன்றுரைப் பிடித்துவந்து ஓடுகிறதண்ணியில்விட்டால் எதிர்நோக்கியோடும் அப்போதுகத்தியினால் ஒரேவெட்டாக வெட்டி தலைப்புறத்தைமாத்திரம் யெடுத்துவந்து ஆடுயிருக்கும் யிடத்தில் புதைத்துவிட்டால் மறுபடியும் எழுந்துதழைமேயப் போகாது புதைத்ததை எடுத்தாலேபோகும். 53

## நினைத்தயிடத்தில்போக சுயஜாலம்.

பாரப்பாஆலின்பிஞ் ஆலங்கன்று
பார்த்துனக்கு அகப்பட்டால் உளவுகேளு
சிரப்பாகஇரவன்றன் கிழமைதன்னில்
தேவிநால்தன்னிலே காப்புக்கட்டி
சிரப்பாஉடன் அடுத்த வெள்ளிநாளில்
சூரியனார் உச்சியிலே பொங்கலிட்டு
காரப்பா கோழிபலி தூபதீபங்
கண்மணியே நீகொடுத்துப் பிடுங்கிவாயே.
பிடுங்கினதைத் திட்டில்லா விடத்தைத்தேடி
பெற்றவனேபத்திரமாய் வைத்துக்கேளு
அடுத்துவரும் செவ்வாயில் தலையைமூழ்கி
அகத்துடையவாசலெல்லா மெழுகிப்போடு
பிடித்துவைப்பாய்சாணத்தால் கணேசரென்று
பில்லருகுவெல்லமுடன் தாம்பூலங்கள்
யெடுத்துவந்தவேறதனை யெதிரில்வைத்து
யிலைக்குதூபதீபம் தேங்காய்தானே.
தேங்காயையுடைத்தல்லோ தூபங்காட்டி
திட்டில்லாவிடத்துக்கு வேரைதூக்கு
தேங்காதேதவெகுதினவராய் தினமும்பாரு
திபம்போலாட்சத்ரம் வீழும்போது
வாங்கியேயதிவிரைவாய் வேரைப்போட்டு
வலிதன்றகாலதனால் மிதித்துக்கொண்டு

தேங்காமல்வேரெடுத்து காட்டிந்தூப
செருப்பிலேவைத்துவழி நடந்துபாரே.

(வ-ம்) ஆலமரத்தின்கீழ் ஆலங்கன்று அகப்பட்டால் ஆதிவாரங்காப்புக்கட்டி தூபதீபங்கொடுத்து அடுத்தவெள்ளிக்கிழமையில் சிறியகுடுவையில் பொங்கலிட்டு பலிகொடுத்து தூபங்கொடுத்து வேராமல் பிடுங்கிவந்து நீட்டுப்படாமல் ஒரு யிடத்தில்வைத்திருந்து அடுத்தசெவ்வாய்க்கிழமையில் தலைமுழுகி வாசலெல்லா மெழுகி பிள்ளையார்பிடித்து அருகம்பில்சூட்டி தாம்பூலம் வெல்லம்பழம் வைத்து யிந்தசெடியும் வேரும் எதிரில்வைத்து தூபதீபங்கொடுத்து தேங்காயுடைத்து வேரையெடுத்து பத்திரமாகத் நீட்டுப்படாமல் வைத்திருக்கவும் தினகாலம்ஸ்நானஞ்செய்து கியாபகமாகப் பார்த்துகொண்டேயிருந்து நக்ஷத்திரம்விழும்போது வேரையெடுத்து கீழேபோட்டு வலதுகாலால் மிதித்துக்கொள்ளவும் செருப்புக்குள்ளே வைத்துதைத்து நீட்டில்லாதிடத் திருக்கவும் ஊர்ப்பிரயாணம் போகும்போது போட்டுநடந்தால் பதின்காதமானாலும் அலுப்பில்லாமல் நடக்கலாகும் யெப்போதும் பத்திரமாய் காப்பாற்றவேணும் மந்திரமில்லை தந்திரந்தான் செய்துபார்த்தால தெரியும்.

விளக்குபார்க்கும் ஒருவிதஜாலம்.

விழாதென்றேசிலரால் சொல்லக்கேட்டு
விளம்பினேன் யின்னமொரு வித்தைகேளு
அழகானமயிலிறகு கொண்டுவந்து
அப்பனேகளஞ்சிரசம் உள்ளேவிட்டு
யிகழாமல்சிலைதனை மேலேசுத்தி
யெண்ணையிலே தோய்த்ததனை கொளுத்திப்பாரு
புகழதனை குருவெனக்குச் சொல்லவில்லை
புதுமையிதில் யேதேது உண்டோகாணேன்.

(வ-ம்) மயிலிறகு நீட்டமாயுள்ளதை ஒன்றுகொண்டுவந்து அதின்கீழ்துவாரமாக ஒருகளஞ்சிரசம் விட்டு களிமண்ணினால மூடிபிறகு தெரியாமல்சல்லாக்கந்தையால் முழுதிலுஞ்சுத்திவிளக்கெண்ணையில் தோய்த்து ஒருபக்கமாககொளுத்தி பார்க்கவும். 55

முட்டை வெடிக்குஞ் சாலம்.

உண்மைபடா முட்டையது வெடிக்கும்வித்தை
உத்தமனே யிந்தவுரையில் பகரக்கேளு
தென்மையடா கோளிபுட அண்டந்தன்னை
வெள்ளையென்ற சுக்கிலந்தை வாங்கிப்போட்டு

தன்மையாம் சமபாகம் தக்காளிச்சார்
தாக்கடா கண்ணாம்பு கெந்தகந்தான்
கன்மையிலே யென்சொல்லேன் கிமைநேரத்தில்
கடைமருந்து வெடிபோல காட்டுந்தானே.

(வ-ம்) ஒருகோழிமுட்டைக்குள் ளிருக்கும் வெள்ளை அம்புலி யாவுமெடுத்துவிட்டு அதிலவிறைய தாளிக்காய் சுண்ணாம்பு கெந்தகம் இவைகளைவெவ்வேறு சமமாயரைத்து ஒருமிக்கச்சேர்த்து முட்டைக்குள்விட்டு மெழுகால் அதின்சிறுவாயைமூடி குளமுதலிய தண்ணீருள்ளவிடத்திற் போட்டுவைக்க அதில் வெடிசப்தங் கிளம்பும். 56

வாயில் அக்கினி உண்டாகுஞ்சாலம்.

நொண்டிச்சிந்து.

வாயிலக்கினிபறக்கும்- வித்தைதனை
வரைகிறேன்கேளிதோ புவிமீதே
கம்பலமேனும்பூர்சி- ரவிகமும்
தாக்கியேகாயவைத்து சம்பாகம்
வெள்ளைக்கல் தனைப்பொடித்து யிரண்டும்
வோரிடையாகவே கலந்துக்கொண்டு
தாடையில் திருகடித்தான் தனியே
தந்திரமாயடக்கி சபையில்வந்து
வேடிக்கைபாருமென்று மெதுவாய்
ஊதிடஅக்கினிதான் மேலிடுமே. (தந்தின) 57

வழக்குவெல்லும் வித்தை.

மேலிடும்வழக்கவெல்ல உபயோகம்
விளம்புகிறேன்நீர் நலம்பெறவே
நாலிடும்கெரிஞ்சிமின்பேர் அதற்கு
நேரிடையாயில் கோரோஜனையாகும்
இரண்டையும்சேகரித்து வாசலில்
யிரித்தகணேசனை பூசைசெய்து
நிறைந்தகுலதெய்வம்- அதையும்
நினைத்துடனெடுத்ததை வாயிலடக்கி
வழக்குளமுகம்நோக்கு யெதிரி
வருநுவான் மிகநுலான் சிதறிடுவான்
கிழக்குமேற்காயுரைப்பான் அவன்மொழி
கிழித்திடும்உன்மொழி வழியாகும். (தந்தினதனதன) 58

நான்காம்பாகம் முற்றிற்று.

---